# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Monday, the 11th December 1961.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half-past eight of the clock, the Deputy Speaker (SRI B BHAKTAVATSALU NAIDU) in the Chair.

## I. QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

*Textile Workers (Pension).*

* 2221 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

பஞ்சாலை தொழிலாளர்களுக்கு பென்ஷன் கொடுக்கும் திட்டத்தைக் கொண்டுவரும் விஷயமாக மத்திய சர்க்கார் நமது சர்க்காரை ஆலோசனை கேட்டது உண்மையா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இல்லை, ஐயா.

SRI V. K. KOTHANDARAMAN : சார், மத்திய சர்க்கார் நமது சர்க்காரை ஆலோசனை கேட்கவில்லையென்று சொன்னாலும் கூட நமது ராஜ்ய தொழிலாளர்களின் எதிர்கால நலனை உத்தேசித்து பென்ஷன் முறையை அனுசரிப்பதாக உத்தேசம் உண்டா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்போதே "டெக்ஸ்டைல் இண்டஸ்ரி"-யைப் பொறுத்த வரையில் "எம்ப்ளாய்மெண்டு பிராவிடெண்டு பண்டு" சட்டம் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டிருக்கிறது. அந்தத் திட்டத்தின்கீழ் தொழிலாளர்கள் தங்கள் ஊதியம், பஞ்சப்படி இவற்றில் நூற்றுக்கு 6-1/4 ரூபாய் விதம் "காண்ட்ரிப்யூட்" பண்ண வேண்டும். அதே அளவுக்கு முதலாளிகளும் பண்ணவேண்டும். அதோடு "கிராஜுடி" அனுகூலம் வேறு இருக்கிறது. மொத்தம் பதினைந்து மாத அடிப்படைச் சம்பளத்திற்கு மேற்போகாமல், ஒவ்வொரு வருஷத்திலும் அவர்களுடைய மாதச் சம்பளத்தில் பதினைந்து நாள் "பேசிக்" சம்பளம் கொடுக்கப்படுகிறது.

SRI V. K. KOTHANDARAMAN : கிராஜுடி எல்லாத் தொழிலாளர்களுக்கும் கொடுக்கக்கூடிய நிலைமையில் சட்டம் இருக்கிறதா? அல்லது குறிப்பிட்ட ஒரு சில தொழிலாளர்களுக்கு மாத்திரம்தான் கொடுக்கப்படுகிறதா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : என்னிடம் இருக்கும் தகவல்படி டெக்ஸ்டைல் துறையில் இருக்கிற எல்லாத் தொழிலாளர்களுக்கும் இந்த அநுகூலம் இருக்கிறது.

DEPUTY SPEAKER : Question Nos. 2222, 2223, 2225 and 2237 are postponed and they will be taken up when the Hon. Minister concerned returns from tour.